



# சிவாஜி

ஞாயிறு வாரப்பதிப்பு

கிராம, சமுதாய நல, கலை, இலக்கியப் பத்திரிகை

SHIVAJI
TAMIL WEEKLY
31st year
of Publication

19—6—1966


# தென் மதராஸ் மின்விநியோக நிறுவனம்

## வெள்ளி விழா

நமது நாட்டில் தனியார் துறையில் இயங்கிக்கொண்டிருக்கும் மின்சார விநியோக நிறுவனங்களில் தென் சென்னை மின் வழங்கு நிறுவனம் முக்கியமானதும், சிறந்த முறையில் இயங்கிக் கொண்டிருப்பதுமாகும். சேஷசாயி பிரதர்ஸ் பிரைவேட் லிமிடெட் இதன் பொறியர்களாகவும் நிர்வாகிகளாகவும் திறம்பட நடத்தி வருகின்றனர்.

தமிழ் நாட்டில் மின்சார உற்பத்தி விநியோகத் துறையில் சேஷசாயி சகோதரர்கள் ஈடுபட்ட பழங் காலத்தையும் இந்த நாளையும் எண்ணிப்பார்த்தால் சுமார் 40 ஆண்டுக்கால நாட்டு வரலாற்றில் மின்சார விநியோகத் துறையில் சேஷசாயி ஸ்தாபனம் மகத்தான சாதனைகளைப் புரிந்துள்ளதை உணரலாம்.

திருச்சி ஸ்ரீரங்கம் நகரங்களுக்கு முதன் முதல் மின்சாரம் கொண்டுவந்த புதிதில் அது பெரிய அதிசயமாகவும் புதுமையாகவும் இருந்தது. மின்சார விளக்குப் போட்டால் அது அச்சான்யமென்றும் மோட்டார் போட்டுத் தண்ணீர் இறைத்தால் கிணறு வற்றிப் போய் பிறகு தண்ணீர் சுரக்காதென்றும், மின்விசிறி போட்டுக்கொண்டால் நோய் வந்துவிடுமென்றும், மின் அடுப்புக்களில் சமையல் செய்தால் அஜீர்ணம் வருமென்றும் எப்படி எப்படியெல்லாம் பழமையான பழக்க வழக்கமுள்ள மக்களிடத்தில் சந்தேகமும் அச்சமும் ஏற்பட்டிருந்திருக்குமென்பதை இன்று நாம் கற்பனைக்கூடச் செய்ய முடியாது.

மூன்று டீசல் ஜெனரேட்டர்களைக் கொண்டு மின்சார விநியோகம் செய்து திருச்சி ஸ்ரீரங்கம் நகரங்களில் மின்னொளி படரச்செய்து இருளையகற்றிய பெருமை சேஷசாயிகளுடையது. மின்சாரப் பெருமையைப் பிரசாரப் படுத்துவதிலும், சிக்கனமுடையதென்று நிலைநாட்டுவதிலும் அந்தக் காலத்தில் பெரும் பிரயாசைப்பட வேண்டியிருந்திருக்கும்.

1933-ல் கிழக்குத் தஞ்சை மின்சாரக் கம்பெனியைத் தொடங்கிய பெருமையும் இவர்களுடையதே, 1937-ல் கிழக்கு ராமநாதபுரம் கம்பெனியும் தோற்றுவிக்கப் பட்டது. இந்த மூன்றும் தனித் தனி அமைப்புகளாக இருந்து மூன்று மாவட்டங்களிலும் மக்களிடையே மின்சார மனப்பான்மையைப் பரப்பியதன் மூலம் இந்தத் துறையில் இவர்களுக்கு ஈடு இணையே கிடையாதென்ற பெருமையும் பெற்றார்கள். 1935 வரை சொந்தமாக மின் உற்பத்தி செய்துவந்த இவர்கள், மேட்டூர் மின்சாரம் உற்பத்தியாகத் தொடங்கிய பிறகு-சொந்த உற்பத்தியை நிறுத்திவிட்டு, மேட்டூர் மின்சாரத்தை வாங்கி விநியோகிப்பவர்களாக மாறினார்கள். எனவே மூன்று நிறுவனங்களும் இணைக்கப்பட்டு தென் மதராஸ் எலக்ட்ரிக் சப்ளை கார்ப்பரேஷன் லிமிடெட் என்ற பெயரால் பெரிய நிறுவனமாக்கப்பட்டு திருச்சியில் தலைமை அலுவலகமாகக் கொண்டு இயங்கத் தொடங்கி 25 ஆண்டுகள் முடிகின்றன. இந்த வெற்றியை நாளை, 20, 21, 22 ஆகிய மூன்று நாட்களிலும் வெள்ளி விழாவாகக் கொண்டாடுகிறார்கள்.

விழாவிற்கு தமிழ்நாடு கவர்னர் திரு. பி. சந்திரா ரெட்டி விஜயம் செய்து சிறப்பிக்கிறார். இந்த வெற்றியில் நாமும் பங்கு கொண்டு நமது மகிழ்ச்சியையும் வாழ்த்துக்களையும் தெரிவித்துக்கொள்கிறோம்.

தேசீய மயமாக்கும் திட்டத்தின் கீழ் ராமநாதபுரம் பகுதி முழுவதையும் அரசாங்கம் எடுத்துக்கொண்டுவிட்டது. திருச்சி மாவட்டத்திலும் ஒரு பகுதியும் அசாங்கப்பகுதிக்குப் போய்விட்டது. இப்போது சுமார் 6200 சதுர மைல்கள் திருச்சி தஞ்சை மாவட்டங்களில் இவரது மின்சார விநியோகம் நடைபெறுகிறது. சுமார் 14 இடங்களில் மின்சாரத் தேக்கங்கள் அமைந்து இந்தப் பரப்பு முழுவதும் பரவலாக விநியோகமாகிறது.

காலஞ்சென்ற பெரிய சேஷசாயி இந்த ஸ்தாபனத்திற்கு மூலகாரணராக இருந்தார் என்றால் சின்னவர் என்று செல்லமாக அனைவராலும் அன்புடன் குறிப்பிடப்பட்ட வி. சேஷசாயி அவர்கள் அந்தப் பெருங் கனவை நனவாக்கி நிலைநாட்டிய மேதை.

தென் சென்னை மின்சாரக் கழகத்திற்கு இன்று தலைவராக விளங்கும் முத்தமிழ்க் காவலர் திரு கி. ஆ. பெ. விசுவநாதம் அவர்கள், மிகச்சிறப்பான முறையில் முன்னின்று நடத்தி வருகிறார். சேஷசாயி அவர்களின் அடுத்த துணைப் பொறியராக இருந்து பல்லாண்டுகளாகப் பணி

[2-ம் பக்கம் பார்க்க]

# சமூகமும் வைத்தியமும்

ஆரோக்கியத்தைப்பாதிக்கும் சமூகச் சூழ்நிலையின் நேர்முக, எதிர்முக அம்சங்களை ஆராய்கிறது சமூக சுகாதாரம். நோயை ஊக்கும் பலவேறு காரணங்களையும், அம்சங்களையும் எவ்வாறு பலவீனப் படுத்துவது அல்லது ஒழிப்பது என்பதை எடுத்துக் காட்டுகிறது சமூக சுகாதாரத்துறை.

மக்களின் வாழ்வுச் சூழ்நிலைகள், அவர்களது உணவு, பொழுதுபோக்கு, குடும்பவாழ்வின் பொருளாயத, ஆன்மிக நிலை, குழந்தைகளின் கல்வி, ஆகிய அனைத்து அம்சங்களும் சமூக சுகாதாரத்துறையின் பாற்பட்டதே.

நோய்களுக்கும், வாழும் நிலைமைகளுக்குமுள்ள தொடர்புகள் அனைத்தையும்பற்றி நாம் அறிந்துள்ளோம் என்று கருதுவது தவருகும். ஒரு குறிப்பிட்ட சூழ்நிலையும், சுற்றுப்புறமும், ஒரு குறிப்பிட்ட நோய்க்கு எவ்வாறு காரணமாகவுள்ளன என்று நாம் இன்னமும் முழுமையாகத் தெரிந்துகொள்ளவேண்டும்.

உதாரணமாக, தொற்று நோய் பரவுவதற்கான காரணங்களையும், தொழில் நோய்கள் (குறிப்பிட்ட தொழிலில் ஈடுபட்டிருப்பதனுல் ஏற்படும் நோய்கள்) ஏற்படுவதற்கான காரணங்களையும் நாம் நன்கறிவோம். இருதய ரத்த ஓட்டமண்டல நோய்கள் உண்டாவதற்கான காரணங்களையும் நாம் நன்கறிவோம். இருதய ரத்த ஓட்டமண்டல நோய்கள் உண்டாவதற்கான காரணங்களும் ஓரளவு அறியப்பட்டுள்ளன. பூகோள ரீதியான நிலைமைகளும், மக்களின் உணவுப் பழக்கங்களுமே, இவ்வகையான நோய்களுக்கு மூலகாரணம் என்று தெரியும்போது, சமூக நடவடிக்கைகளின் மூலம் அதனைக் குறைக்க நாம் வழிதேடுவது சாத்தியமே. இதே போன்று புற்றுநோய், பக்கவாதம் போன்ற நோய்களைப்பற்றியும் ஆராய்ச்சி செய்யப்படவேண்டும்.

ஒரு நோயாளியைப் பரிசோதிக்கும்போது, டாக்டர், அந்நோயாளியின் வாழ்வு முறைகள், வாழும் சூழ்நிலை, உணவுப் பழக்கங்கள் ஆகிய அனைத்தையும் மனதில் கொள்ளவேண்டும்.

சுகாதாரப் பாதுகாப்பின் பொருளாதார அம்சங்களும் மிக முக்கியமானவை.

வெற்றிகரமான இருதய அறுவை சிகிச்சை நடத்தும் ஒரு நிபுணர், நோயாளியின் உயிரைக் காப்பாற்றுவதுடன் மட்டுமன்றி, சமூகத்திற்கு ஒரு தொழிலாளியை மீண்டும் அனுப்புகிருர். இது சமூகத்திற்கு பொருளாயத, ஆன்மீக மதிப்பை அளிக்கிறது. அப்படியானல், நோய்த்தடுப்பு நடவடிக்கைகளை மேற்கொள்வதன் மூலமாக, லக்ஷோபலக்ஷம் மக்களின் உழைப்புத் திறன், வீணுகாது பலன் தருகிறது. ஆரோக்கியமற்ற சூழ்நிலைகளில் வேலை செய்வதால், ஏற்படும் பொருளாதார நஷ்டங்களை எடுத்துக்காட்ட புள்ளி விவர இயல் முயலவேண்டும்.

நாட்டின் சராசரி வயது உயர்ந்துள்ளது. எனினும் நாம் திருப்தியடைந்து விடக்கூடாது. மென்மேலும் மனிதர்களின் ஆயுட்காலத்தை நீடிப்பதை மட்டுமன்றி, மனிதர்கள் உற்சாகமான உழைப்பில் ஈடுபடும் கால கட்டத்தையும் நீடிப்பது அவசியம்.

ஏதேனும் ஒரு நோயினல் உழைக்கும் திறனிழந்துவிட்டோருக்கு மீண்டும் அவர்கள் பயனுள்ள சமூகப் பணியாளர்களாக ஆவதற்கான வழிவகைகளையும் நாம் தேடவேண்டும்.

——

நாடகாசிரியருக்குப்

## பொன்னுடை

16-6-66 அன்று மாலை 7மணிக்கு காரைக்குடி அழகப்பா டிரஸ்ட் கல்லூரி நிதிக்காக டி. கே. எஸ். சகோதரர்களின் 'இராஜ ராஜ சோழன்' நாடகம் தமிழ்க்கடல் திரு. ராய, சொ. அவர்கள் தலைமையில் நடைபெற்றது.

இடைவேளையில் இராஜ ராஜ சோழன் நாடகத்தை எழுதிய ஆசிரியர் திரு. அரு. இராமநாதன் அவர்கட்கு டி. கே. எஸ். சகோதரர்களின் சார்பில் திரு. ராய. சொ. பொன்னுடை போர்த்திப் பாராட்டினுர்.

தமிழ் நாடக உலகில் இராஜ ராஜசோழன் நாடகம் தமிழுணர்ச்சியையும் ஒரு சிறப்பான மறுமலர்ச்சியையும் ஏற்படுத்தியுள்ளதென டி. கே. ஷண்முகம் குறிப்பிட்டார்.

கல்லூரி டிரஸ்ட் தலைவர். திரு. சி. வி. சி. டி. வெங்கடாசலம் செட்டியார் அவர்கள் நாடகாசிரியரையும் நாடகக் குழுவினரையும் வாழ்த்திப் பேசினுர்.

நாடக அரங்கில் இடமில்லாத அளவிற்கு பெருந்திரளான மக்கள் வருகை புரிந்து நாடகத்தைக்கண்டு மகிழ்ந்தார்கள்.

டி. கே. பகவதி நன்றி கூறுகையில் பொதுமக்களின் வேண்டுகோளின்படி மீண்டும் ஔவையார், சிவகாமியின் சபதம், அப்பாவின் ஆசை ஆகிய மூன்று நாடகங்களும் நடைபெறுமென அறிவித்தார்.

லால்குடியில்

## குறள் விழா

அனைத்து மன்றங்களின் சார்பில் ஜூன் 2-ம் நாள் லால்குடியில் குறள்விழா நடந்தது. காலையில் கருத்தரங்கிற்கு பேராசிரியர். க. அன்பழகன் M.A., M.L.C., தலைமை தாங்கினுர். புலவர் முத்துவேங்கடேசன் 'அறம்' பற்றியும், புலவர் புதுவை சிவ. கண்ணப்பர் 'பொருள்' பற்றியும், புலலர் ப. அரங்கசாமி 'இன்பம்' பற்றியும் உரையாற்றினர். மாலையில் கவிஞர்கலைவாணன் தலைமையில் கவியரங்கமும், பேராசிரியர் இரா. இராதாகிருஷ்ணன் தலைமையில் 'வள்ளுவர் வாழ்க்கைச் சிறப்பிற்கு வலியுறுத்துவது அன்பா, பொருளா?' என்ற தலைப்பில் பட்டி மன்றமும், இரவு, புலவர் கீரன் தலைமையில் 'மானங்காத்த மன்னன்' என்ற நாடகமும் நடந்தன. சான்ருண்மை என்று பொதுத் தலைப்பில், அன்பு, நாண், ஒப்புரவு, கண்ணேட்டம், வாய்மை என்ற முறையில் முறையே புவியரசன், மரியதாஸ், தாமரைச் செல்வன், தி. கு. நடராசன், முத்து வேங்கடேசன் ஆகியோர் பாடினர். பட்டி மன்றத்தில் அன்புவழி அரங்கசாமி, முத்துவேங்கடேசன், புவியரசன் ஆகியோரும், பொருள்வழி சி. வி. கண்ணப்பர், மரியதாஸ், தி. கு. நடராசன் ஆகியோர் கலந்துகொண்டு பேசினர். அன்பு வென்றது.

[1-ம் பக்கத் தொடர்ச்சி]

புரிந்துவந்த திரு ஹெச். கே. ராமசாமி அவர்கள் இன்று சேஷசாயி ஸ்தாபனத்தின் நிர்வாக உறுப்பினராக இருந்து நெடிய மரபின் வழியையும், திறமையையும் பேணிக் காத்து வருகின்ருர்.

சேஷசாயி பிரதர்ஸ் தமிழகத்தின் தொழில் துறையில் புதிய புதிய முயற்சிகளைத் துணிந்து மேற்கொண்டு ஆரம்பித்து வெற்றிகரமாக நடத்துவதில் புகழ் பெற்றவர்கள். அவர்களுடைய நிருவாகத்தில் இயங்கும் தென் சென்னை மின்சாரக் கழகம் பல்லாண்டுகள் தொடர்ந்து இவர்களால் நிர்வகிக்கப்படும் என்றும் அதனுல் பொதுமக்கள் நற்பயன் பெற்று இன்புறுவர் என்றும் நம்புகிருேம்.

——

சென்றவாரத் தொடர்ச்சி :

# தென்னகத்தில் சில நகர்கள்

மனசை ப. கீரன், பி. ஏ., பி. டி.

### பம்பாய்

மக்கள் நெரிசலில் இந்தியாவிலேயே தொல்லை மிகுந்த நகரம் பம்பாய். தொகையில் அதிகமான மக்களுள்ள பெருநகரம் கல்கத்தா. விக்டோரியா டெர்மினஸ், சர்கேட் ஆகிய இருப்புப்பாதை நிலையங்களில் சிறிது நேரம் இருந்து பார்க்கவேண்டும். இரயில் வண்டிகள் வருவதும், போவதும் மக்கள் பல வாயில்களின் வழியே ஆற்று வெள்ளம்போல் வெளியேறுவதும் காணலாம். 'கடலின் மடையைத் திறந்தது போல' என்று இலக்கியங்களில் படிப்போம். ஆனால் உண்மையிலேயே மக்களாகிய கடலின் கரை உடைபட்டதோ என்று இக்கட்டங்களைப் பார்த்து நினைப்போம்.

டௌன் பக்கங்களில் ஏறி நின்றால் நான்கு பேர்கள் ஒரே சமயத்தில் ஒருசேர ஏறுவதும் அரிது. இருவர் ஏறுமுன் புறப்பட்டுவிடும். நண்பர் பிரிவர். எதிலும் அவ்வளவு விரைவு கூட்டம் நெரிசல். அதிகாலையிலேயே தொழிலாளிகள் தொழிற்சாலைகட்கு ஓடுவதும் காணலாம்.

மூலை முடுக்குகளிலும் பல அடுக்கு மாளிகைகளே நிற்கும். வெற்று வெளிகளைக் காண்பது மிக அரிது. வீட்டு வாடகை அதிகம். அப்படியும் இடம் கிடைப்பது குதிரைக் கொம்பே. 2000; 3000 ரூபாய் பகடி என்னும் இலஞ்சம் கொடுத்தால்தான் வீடு கிடைக்கும். வீட்டைக் காலி செய்யும் பொழுது வீடு கிடைக்க அவ்வளவு கிராக்கி இருந்தால் வருபவரிடம் அத்தொகையைப் பெறலாம். ஆதலால் 70 மைல் தொலைவிலுள்ள பூனா போன்ற நகர்களில் இருந்தும் அன்றாடம் பம்பாயில் வேலைக்கு வந்து செல்லுவோரும் உள்ளனராம்! ஆகவே அதிகாலையில் புறப்பட்டால் இரயில், பஸ் பிடித்து, நடந்து அலுவலகத்தில் பல மாடி ஏறித் தன் இருப்பிடம் சென்றமர்வான். மாலை வேலை முடிந்ததும் இயந்திரம் போல் வீடு போய்ச் சேருவான். இதுவே பம்பாயில் அன்றாட வாழ்க்கை!

பம்பாயில் கடற்கரையில் புகழ்பெற்ற இந்தியா நுழைவாயிலும், பக்கத்தில் சிவாஜியின் கம்பீரமான சிலையும், அழகான, வளைந்த, பல அடுக்கு மாளிகைகள் கொண்ட கடற்கரையும் பல பஞ்சாலைகளும் உள்ளன.

கடலில் சுமார் 6 மைல் தொலைவில் யானைத்தீவு உள்ளது. அதில் பல குகைக் கோவில்கள் உள்ளன. இப்பாறைகள் உறுதியான கருங்கற்கள். அதில் மும்மூர்த்தியின் மிகப்பெரிய உருவச் சிலை மார்பிற்கு மேல், தலை வரை எழிலுடன் விளங்குகிறது. பிற பற்பல அழகிய சிற்பங்கள், படையெடுத்து வந்த முஸ்லீம்களினால் கை யிழந்தும் காலிழந்தும் சிதைந்தும் காண்கின்றன.

நகரில் உள்ள பரபரப்பு மயக்கும் தருவதாலும் பஸ்கள் தொடங்குமிடத்தில் உள்ள கண்டக்டர்கள் விளக்கமாக வழி சொல்லுகின்றனர். அவர்களுக்கு, 'நன்றி'! என்று சொன்னபோது, 'அது எங்கள் கடமை, நன்றி எதற்காக சொல்ல வேண்டும்? என்றார். மீண்டும், நன்றி என்று கூறி விடைபெற்றேன். பிற பொதுமக்களையும் வழிகேட்டால் சொல்லுவார்கள். வட நாட்டில் சில இடங்களில் காணத்தக்க மொழி வெறி பம்பாயில் இல்லை.

### பீஜப்பூர்

பம்பாயை விட்டுச் சென்னை நோக்கி புறப்பட்டால் மேற்குத் தொடர்ச்சி மலைகளைப் பல இடங்களில் குடைந்து அவ்வழிகளில் மதகுகளில் நுழையும் நீர் போலத் தொடர் வண்டி பல பர்லாங் தொலைவிற்கு நீண்ட குகைகளில் [Tunnels] நுழைந்தோடும் வானளாவிய மலைகளையும், ஆறுகளையும் மடுக்களையும் காணும்போது இப்பகுதிகளிலெங்கும் அலைந்து சிவாஜி முகலாயரை எதிர்த்தான் என்ற எண்ணம் எழுகின்றது. அடுத்துவரும் வரலாற்றுச் சிறப்புள்ள இடம் பீஜப்பூர் நகரமாகும்.

பீஜபூரும் விசயநகர பேரரசிற்கு எதிரியாயிருந்த கோல்கொண்டா சுல்தான் போன்ற மற்றொரு சுல்தானின் தலைநகரமாகும். பீஜபூர் இருப்புப்பாதை நிலையத்தில் இறங்கியதும் சுற்றிலும் வெறிச்சென்றுள்ள வரண்ட வெளிகளையே காண்கிறோம். எங்கும் மண்ணும், புழுதியும் உள்ளன. பல இடங்களில் சிதைந்த நிலையில் கோட்டைச் சுவர்கள் குறுக்கிடுகின்றன. அவை மிகப்பெரிய கோட்டை இருந்ததைக் குறிப்பிடுகின்றன. பல கட்டடங்கள் சிற்பநலமிகுந்துள்ளன. கற்களால் வளைவுகள் (ARCHES) கட்டப்பட்டு மேலே அழகு மிக்க மாளிகைகளை அமைக்கின்றனர். அத்தகைய பல கட்டடங்களில் அரசினர் பணிமனைகள் அமைந்துள்ளன. கோட்டையைச் சார்ந்த அகழிகளில் தேங்கிய நீரைச் சார்ந்துள்ள பகுதிகளில் ஏராளமான எருமைகள் மேயும். அவைகளுடம்பில் பேன்பிடிக்கும் என்பதால் கால்களிலுள்ள முடிகளை மழித்துள்ளனர். அங்கேயொரு வயலில் இரு எருமைகள் முட்டி மோதிச் சண்டையிட்டன. அவைகள் ஒன்றை மற்றொன்று முட்டுவதும் பின்வாங்குவதுமாயிருக்கின்றன. உடலெங்கும் கொம்புபட்டு இரத்தம் வழிந்தது. அவைகளை நாம் விலக்கினாலும் விலகா. அவை சண்டையிட்டுப் பிரிய பல மணி நேரமாகும். வரலாற்றுச் சிறப்புள்ள நகரில் எருமைகளே இப்படிப் போரிட்டால் மன்னர் எப்படி சண்டை செய்திருப்பர் என வியந்தோம்.

பீஜப்பூரிலேயே சிறந்த கட்டடம் 'கோல் கும்பாஸ்' என்னும் சமாதி. இது அந்நகர் சுல்தான் அடில்ஷாவின் சமாதியைக் கொண்டது. மிகப்பெரிய இக்கட்டடத்தின் கூரை கவிழ்த்து வைத்த கிண்ணம் போல அரையுருண்டை வடிவில் உள்ளது. சுண்ணாம்பாலும் செங்கல்லாலும் கட்டப்பட்ட இதனுள் குறுக்கு, நெடுக்காக உத்தரங்களாக மரமோ, பிறவோ பயன்

[10-ம் பக்கம் பார்க்க]

# டாமினிகன் குடியரசு

டாமினிகன் குடியரசின் நிகழ்கால அரசியல் நிகழ்ச்சிகளில், ரஃபேல் ட்ருஜில்லோவின் 30 ஆண்டு கால ஏகாதிபத்திய நிர்வாகமும், அந்நாட்டு அரசியலில் யூ. எஸ்ஸின் தலையீடும், நாட்டு விவசாயத் துறை அபிவிருத்தி புறக்கணிக்கப்பட்டதும் செவ்வனே பிரதிபலிக்கின்றன. 1961 ஆம் ஆண்டில் ட்ருஜில்லோ எதிரிகளால் கொல்லப்பட்ட காலம் வரை டாமினிகன் தீவை அவர் தன் விருப்பம் போல் நிர்வகித்து வந்தார். எதிர்க் கட்சியைச் சேர்ந்தோர் ஒன்று சிறையிலிடப்பட்டார்கள்; அல்லது நாடு கடத்தப்பட்டார்கள். நாட்டுப் பொருளாதாரம் அவருடைய குடும்பத்தார்களாலும், அவராலும் கட்டுப் படுத்தப்பட்டிருந்தது. அதன் விளைவாக, அவர்களிடையே நாட்டு செல்வத்தின் பெரு அளவு சேமிக்கப்பட்டிருந்தது. தனக்குத் தானே 'நாட்டு நலனைப் பேணுவர்' என்று ரூட்ஜில்லோ பட்டம் சூட்டிக் கொண்ட போதிலும் அவருடைய 30 வருடகால ஏகாதிபத்திய நிர்வாகத்தில் மக்கள் எளிமையில் ஈடுபட்டும் அரசியலில் ஒரு விதமான கருத்துக்களையும் எடுத்துக் கொள்ள இயலாதவர்களாயினர். ஆயினும் அவர்கள் வெறுத்த ஏகாதிபத்திய நிர்வாகம் என்று முடிவடையும் என்று ஆவலுடன் இருந்தார்கள்.

சமீபகால இந்நாட்டு வரலாற்றில் யூ. எஸ்ஸின் தலையீடு ஓர் முக்கிய அத்தியாயமாகத் திகழ்கிறது. 1916 ஆம் ஆண்டிலிருந்து 1924 ஆம் ஆண்டு வரை யூ. எஸ் கடற்படைகள் இத்தீவில் நிறுத்தப்பட்டிருந்தார்கள். 1962 ஆம் ஆண்டில் மறைந்த ட்ருஜில்லோவின் குடும்பத்தினர் மீண்டும் அரசியலில் பங்குகொள்ள முன்வந்தபோது யூ. எஸ் கடற்படை தீவிற்கருகாமையில் தென்பட்டதின் விளைவாக அவர்களின் முன்னேற்றமும் பின்வாங்கியது. நாட்டுப் பொதுத்தேர்தலில் மிதவாதியான ஜுவான் போஷ் பதவியை விட்டகற்றப்பட்ட பொழுது யூ. எஸ் நிர்வாகம் இந்நாட்டுக்கு அளிக்கப்பட்ட உதவிகளை மறுகணமே நிறுத்திவிட்டது. சமீப காலத்தில் தான் டோனல்டு ரீட் கப்ரால் என்ற புரட்சி நிர்வாகஸ்தரும் அவருடைய நிர்வாகமும் ஜான்ஸன் நிர்வாகத்தால் அங்கீகாரம் பெற்றன. கால அளவில் டோனல்டு ரீடின் நிர்வாகத்தை அகற்றி, நாடு கடத்தப்பட்ட ஜுவான் போஷ் மீண்டும் பதவி ஏற்க வேண்டும், என்று, அதிகாரிகளும் மக்களும் சர்ச்சை செய்தார்கள். இவர்களுடைய எதிர்ப்பை நாட்டு இராணுவம் கட்டுப்படுத்தவே டாமினிகாவில் இயங்கும் 3 பெரிய கம்யூனிஸ்டு கட்சிகள் (காஸ்ட்ரோவின் கட்சி, டாமினிகா மக்கள் இயக்கம், மாஸ்கோ மக்கள் சோஷியலிஸ்ட் கட்சி) புரட்சிக்குப் போதிய அளவு பக்க பலம் அளித்து வந்தன. இராணுவத்திலிருந்து இளம் அதிகாரிகள் பதவியை விட்டகன்றனர். அவ்வமயம் எங்கு ஸிவில் போர் தலையெடுக்குமோ என்று அஞ்சி யூ எஸ் 20,000 கப்பற் படைகளை அனுப்பி வைத்தது.

1965-ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் ரீட் நிர்வாகத்திற்கு எதிராகத் தலை தூக்கிய கிளர்ச்சியின் விளைவாக மேற்சொன்ன 3 கட்சிகளும் ஒன்றி இயங்க வாய்ப்பு ஏற்பட்டது. அவர்களின் ஒற்றுமை இயக்கம் நாட்டு நலனுக்கு பாதகம் விளைத்ததேயொழிய நன்மை விளைவிக்கவில்லை. அவ்வாண்டு இது வரை காணாத அளவுக்கு மழையின்மையினல் வறட்சி ஏற்பட்டு மக்கள் பாதிக்கப்பட்டனர். வேலையில்லாதவர்களின் எண்ணிக்கை உயர்ந்தும், அந்நியநாட்டு உல்லாசப் பிரயாணிகளின் நாட்டு வருகையில் எண்ணிக்கை குறைந்தும், நாட்டுப் பொருளாதாரம் க்ஷீணமடைந்து காட்சியளித்தது. இவ்வாறு அரசியல் பொருளாதாரத் துறைகளில் ஓர் வெடிக்கும் நிலை ஏற்பட்ட தருணத்தில் யூ. எஸ். தலையிடுவதற்கு வரவேற்பளித்தாற்போல் இருந்தது. ட்ருஜில்லோவின் வீழ்ச்சிக்கும், அவருடைய குடும்பத்தினர் மீண்டும் நிர்வாகத்தில் இடம் பெற வொட்டாமல் வேர் அறுத்ததற்கும் காரணமாயிருந்த யூ எஸ்ஸின் அன்றைய தலையீடு பின்னர் நற்பலன்களை அளிக்கவில்லை.

பொதுத்தேர்தலில் வெற்றி பெற்ற மிதவாதியான ஜுவான் போஷ் மீண்டும் நாட்டுக்குத் திரும்பி வருவதை யூ. எஸ். முழுமனதுடன் வரவேற்கவில்லை. கம்யூனிஸ்டுகளிடம் அளவுக்கு மிஞ்சி அவர் சகிப்புத் தன்மை காட்டும் மனப்பான்மை கொண்டவர் என்ற அவரைப் பற்றிய ஓர் புகார் இதற்குக் காரணமாக இருக்கலாம், என்று சிலர் ஊகிக்கிறார்கள்.

ட்ருஜில்லோவின் நிர்வாகக் காலத்தில் சுமார் ஓர் 27 ஆண்டுகளுக்கு ஜுவான் போஷ் நாடு கடத்தப்பட்டிருந்தார். அவர் நாட்டுக்குத் திரும்பி ஜனதிபதி பதவி வகித்து மீண்டும் 1963-ல் பதவியை விட்டு அகற்றப்பட்டார், 1962-வது பொதுத் தேர்தலில் ஏராளமாகப் பாமரமக்களின் வாக்குகளைப் பெற்று இவர் வெற்றி பெற்றார். நிலச் சீர்திருத்தத்தை ஒட்டிய கருத்துக்களினாலும் காஸ்ட்ரோவின் கொள்கைக்கு, கண்டனம் தெரிவிக்காததனாலும், கம்யூனிஸ்ட்களுக்கு தடை விதிக்காததனாலும் இவரே ஓர் கம்யூனிஸ்ட் என்று எண்ண இடம் கொடுத்தது. ஆயினும் இவர் கம்யூனிஸ்ட்களை எதிர்த்து அவருடைய ஆதரவுகளையும் புறக்கணித்துள்ளார்.

இவ்வாண்டு ஜூன் மாதம் ஒன்றும் தேதியன்று நாட்டில் நடைபெற்ற ஜனதிபதிப் பொதுத் தேர்தலுக்கு ஜுவான் போஷ், ஜோகின் பாலாகூயர், ரஃபேல் பானெல்லி என்ற மூவரும் போட்டியிட்டார்கள். ஜுவான் போஷின் அரசியல் அனுபவங்களும், அவர் ஏற்கனவே நாட்டு ஜனதிபதியாயிருந்த ஓர் கௌரவமும், அவருக்கு இப்பொழுது தேர்தலில் வெற்றிபெற அடிகோலும், என்று எதிர்பார்க்கப்பட்டிருந்தது. ஆனல் கவிஞரும், எழுத்தாளரும், சட்டப் பேராசிரியருமான ஜோகின் பாலகூயர் வெற்றி பெற்றுள்ளதாக இப்பொழுது தகவல் கிடடியுள்ளது.

—

## தக்காளியைப் புகைக்கலாம்!

டாக்டர் ஜி. இலின் சிகரெட்டிலுள்ள நிகோட்டின் விஷத்திற்குப் பரிகாரம் கூறியுள்ளார். இனி நீங்கள் தக்காளியைப் புகைக்கலாம்!

அவர் தக்காளிச் செடியில் பதியமிட்ட புகையிலையைப் பயிராக்கியுள்ளார். இந்தப் புகையிலையில் நிக்கோடின் இல்லை.

இது ஒரு முக்கியமான விஞ்ஞானக் கண்டு பிடிப்பாகும்.

'நிக்கோட்டின் போன்ற அல்புமின் கலந்த பொருள்கள், செடிகளின் வேர்களில் உண்டாகின்றன. இதுவரை இலைகளில், ஒளிச்சேர்க்கையின் விளைவாக, அல்புமின் உண்டாகிறது என்று கருதப்பட்டது. டாக்டர் இலினின் சோதனைகள் இதனைப் பொய்யாக்குகின்றன. 'செடியின் வேரமைப்பே ஒரு உயிர் ரசாயன ஆய்வுக்கூடம்' என்கிறார் அவர். (டாஸ்)

## சங்கீதப் போட்டி

இளம் வித்வான்களைத் தேர்ந்தெடுத்து ஊக்கமளிப்பதற்காக ஆகாசவாணி 'அகில இந்திய சங்கீதப் போட்டி' ஒன்றை நடத்த ஏற்பாடு செய்துள்ளது. இப்போட்டி இரண்டு பகுதிகளாக நடத்தப்படும். முதலில் பூர்வாங்கப் போட்டி. இது ஆகாசவாணியின் ஒவ்வொரு நிலையத்திலும் நடைபெறும். பின்னர் இறுதிப் போட்டி... இந்துஸ்தானி சங்கீதத்திற்குடெல்லியிலும், கர்நாடகசங்கீதத்திற்கு சென்னையிலும் நடத்தப்படும்.

1966 ஆகஸ்ட் மாதம் 1-ம் தேதியன்று 16 வயதுக்கு குறையாமலும், 24 வயதுக்கு மேற்படாமலும் உள்ளவர்கள் இப்போட்டியில் கலந்துகொள்ளலாம். அத்துடன் அவர்கள் ஆகாசவாணியின் எந்த நிலையத்திலும் பொது இசை நிகழ்ச்சிகளிலோ, அல்லது குழந்தைகள் நிகழ்ச்சி தவிர, நிலையத்தின் இதர ஒலிபரப்புகளின் ஒரு பகுதியாக இடம்பெறும் இசை நிகழ்ச்சிகளிலே கலந்துகொள்ளாதவர்களாகவும் இருக்கவேண்டும்.

வாய்ப்பாட்டிற்கு சாஸ்த்ரீய சங்கீதம், லகு சாஸ்த்ரீய சங்கீதம், லகு சங்கீதம் ஆகிய மூன்று பிரிவுகளிலும், வாத்ய இசைக்கு சாஸ்த்ரீய சங்கீதம், லகு சாஸ்த்ரீய சங்கீதம் ஆகிய இரு பிரிவுகளிலும்; 'விருந்த கான்' அதாவது கோஷ்டி கானத்திற்கும் போட்டி நடைபெறும்.

பூர்வாங்கப் போட்டி 1-8-1966 முதல் 6-8-1966 முடிய நடைபெறும். பூர்வாங்கப்போட்டியில்வெற்றி பெற்றவர்களின் பாட்டு வாசிப்பு இவற்றை ஒலிப்பதிவு செய்து இறுதிப் போட்டிக்கு அனுப்பி வைக்கப்படும். இறுதிப் போட்டியில் வெற்றி பெறுபவர்களுக்குத் தகுந்த பரிசுகள் வழங்கப்படும்.

இப்போட்டியில் கலந்துகொள்ள விருப்பமுள்ளவர்கள் தங்களுக்கு அருகாமையிலுள்ள வானொலி நிலைய நிர்வாகஸ்தருக்கோ அல்லது உதவி நிர்வாகஸ்தருக்கோ எழுதி இப்போட்டிக்கான விண்ணப்ப பாரங்களைப் பெற்றுக்கொள்ளலாம்.

பூர்த்தி செய்து அனுப்பப்படும் விண்ணப்பங்களை ஏற்றுக்கொள்வதற்கான கடைசி தேதி 8-7-1966.

—

## கி. மு. ஆறும்நூற்றுண்டு தானியங்கள்!

உக்ரேனில், டினீப்பர் நதியின் இடதுகரையில், பூமியைத் தோண்டிப் பார்த்தபோது, ஒரு மண்பானையில் தானியங்களும் விதைகளும் அகப்பட்டுள்ளன. இப்பானை லெனின் கிராடுக்கு அனுப்பப்பட்டது.

லெனின்கிராடிலுள்ள புதைபொருள் ஆராய்ச்சியாளர்கள், இந்த தானியங்கள் கி. மு. ஆறும் நூற்றுண்டைச் சேர்ந்தவை என்று கூறுகிருர்கள்.

அந்தமண்பானையும், அதிலுள்ள தானியங்களும் மிக நன்ருகப் பாதுகாக்கப் பட்டிருக்கின்றன.

பண்டைக் காலத்தில் உக்ரேன் பிரதேசத்தில் விவசாய நாகரிகம் ஓங்கியிருந்தது என்பதற்கு இது மற்ருெரு சான்ருகும்.

(டாஸ்)

### அரியலூர் டி. மு. கோ.

O. S. 59/66

சிதம்பரத்துடையார் —வாதி

பக்கிரிமுகமது சாயபு—பிரதிவாதி

ஷெ நம்பர் வாதி ஷெ பிரதிவாதியால் 17-3-65-ல் ஏற்பட்ட புரோநோட்டுப்படி ரூ. 869-11-க்கு தாவா செய்து உம்முடைய சம்மனை ஒட்டி சார்வுசெய்ய உத்திரவாகி 4-7-66-ல் ஒதங்கி.

R. நரஸிம்மன்
வாதி அட்வகேட்

1/7055/21

# குரங்குகளுக்கு 'விடுதலை' !

திருவனந்தபுரத்தில் திருவாங்கூர் மன்னரின் கவாடியர் அரண்மனையைச் சுற்றியுள்ள பகுதிகளில் குரங்குகள் தாராளமாக நடமாட திருவனந்தபுரம் கார்ப்பரேஷன் 'சுதந்திரம்' வழங்கியுள்ளது!

கவாடியர் அரண்மனைப் பகுதியில் 200 குரங்குகள் இருப்பதாக கணக்கிடப் பட்டுள்ளது. கார்ப்பரேஷன் முடிவால் இந்தக் குரங்குகள் அரண்மனை அதிகாரிகளுக்கும், சுற்றுப்புறவாசிகளுக்கும் எரிச்சலூட்டும் விதத்தில் இனி தாராளமாக நடமாடிக்கொண்டிருக்கும்!

இந்தக் குரங்குகளால் துன்பத்திற்காளான மக்கள் அரண்மனைப் பகுதிக்குள் தஞ்சம் புகுந்தனர். 'மேலிடத்திலிருந்து' இடையுறுத இந்தத்தொல்லைபற்றி கார்ப்பரேஷனிடம்புகார் கூறினர்.

கார்ப்பரேஷன் அதிகாரிகளும் ஜில்லாக் கலெக்டரும் உடனே அரண்மனைப் பகுதிக்குள் எவ்வளவு குரங்குகள் இருக்கின்றன என்று கணக்கெடுத்தார்கள்.

200 குரங்குகள் இருக்கும் என மதிப்பிடப்பட்டது. இக்குரங்குகளை இறந்தோ, அல்லது உயிருடனே பிடித்துத் தருபவர்களுக்கு ரூ. 500 தருவதாக அறிவிக்கப்பட்டது. ஆனால் குரங்குகளை பிடிக்க யாரும் வரவில்லை. ஆகவே மேலும் இதற்கு நிதி ஒதுக்க கார்ப்பரேஷன் கமிஷனர்! கவுன்ஸிலைக் கேட்டுக்கொண்டபோது அந்தக் கோரிக்கை நிராகரிக்கப்பட்டதால், குரங்குகள் 'சுதந்திரமாக' தாங்கள் உள்ள இடத்தில் நடமாடிக் கொண்டிருக்கின்றன!

——



மலர் : 31 | ஊன்றிய கொள்கையும் ஒன்றே கணந்தொறும் | 1966
இதழ் : 30 | தோன்றும் கடமைகள் ஆற்றுதல் நன்றே | ஜூன் : 19

# யாத்ரா தானம்

பிரயாணம் போகிறவர்கள், நல்லபடியாகப் பிரயாணம் நடைபெறும் பொருட்டாகவும், போய் வந்த யாத்திரையின் புண்ணியம் நிலைக்கும் பொருட்டாகவும் யாத்ரா தானம் செய்வது ஒரு சடங்கு. இந்த நாளில் அபாயமில்லாமல் யாத்திரை நடந்தால்போது மென்ற கவலை அதிகமாகிக் கொண்டிருக்கிறது. விமானம், ரயில், பஸ், கார், ரிக்ஷா, இவையெல்லாம் இருக்கட்டும், தெருவில் நடந்தாலே ஒருவன் பத்திரமாகப் போய்ச் சேரமுடியுமா என்ற அளவுக்கு, பரபரப்பும், மோதல்களும் தெருக்களில் ஏற்பட்டு விடுகின்றன.

பம்பாயில் நடைபெற்றுள்ள பயங்கரமான ரயில் விபத்து நாட்டு மக்களை ஒரு கலுக்கு உலுக்கிவிட்டிருக்கிறது. ரயில் மந்திரி ராஜீநாமா செய்யவேண்டுமென்று அரசியல் வாதிகள் ஆர்ப்பாட்டம் பண்ணுகிறார்கள். தன்னுடைய ராஜீநாமாவின் விளைவாக இத்தகைய அபாயங்களுக்கு முற்றுப்புள்ளி ஏற்படுமென்ற உறுதியிருந்தால் நூறு தடவை வேண்டுமானாலும் ராஜீநாமா செய்யத் தயார் என்று அமைச்சர் கூறியிருப்பது அவருடைய உள்ளத்தின் சோகத்திற்கும் வேதனைக்கும் எடுத்துக்காட்டு. அமைச்சர் ராஜீநாமா என்பது ஒரு அரசியல் நாகரிகமாகலாமே தவிர பரிகாரமாகாது. ராஜீநாமா ஒரு சம்பிரதாயமாகிவிட்டால், அமைச்சரைப் பதவியை விட்டு வெளியேற்ற விரும்பும் விஷமக் கூட்டத்தினர் இத்தகைய அபாயங்களை உண்டாக்கும் கெட்ட எண்ணமும் வளர இடமுண்டாகிவிடும் என்பதையும் கொஞ்சம் சிந்திப்பது அவசியம்.

வேண்டுமென்று மனிதர்கள் செய்ததா? கவனக்குறைவால் நேர்ந்ததா என்பதை ஆராய்வதும், ஏதோ பரிகாரங்கள் தருவதும் இயல்பாக நடைபெறக் கூடிய விளைவுகள். உயிரிழந்தோருக்கு எத்துணைப் பரிகாரமும் என்ன பயன்தரப் போகிறது? இனிமேலாகிலும் திறமையான நிர்வாகம் நடைபெறும் பந்தோபஸ்து ஏற்பாடுகளை அதிகப்படுத்துவதும் அவசியம். ஓராயிரம் திட்டங்களையும், புதியபுதிய ஏற்பாடுகளையும் இழுத்துப் போட்டுக் கொண்டு, உள்நாட்டு அமைதி, வெளிநாணயச் செலாவணி, எல்லைப் பாதுகாப்பு எல்லாவற்றிலும் அமைதியற்றுத் தவிக்கும்அரசாங்கம்எதைத்தான் என்ன செய்யப் போகிறதோ தெரியவில்லை, விமான, ரயில் விபத்துகளைப் பற்றிய செய்திகள் மிகவும் வேதனை தருகின்றன. ஆண்டவன் தான் காப்பாற்ற முடியும்.

# குப்பைக் கூடையில் தங்கச் சிலை

சுமார் 50 கிலோ கிராம் எடையும் 50 சென்டி மீட்டர் அகலப்பீடமும் கொண்ட புத்தரின் தங்கச்சிலை ஒன்று பாங்காக் நகரின் மிகப் பழைய கோவில் ஒன்றின் பின் வாசல் பகுதியில் ஒரு குப்பைகூடையில்கிடந்தது. அது ஒருகாகிதத்தால் சுற்றப் பட்டிருந்தது.

கோவிலின் காவற்காரர் அச்சிலையைக்கண்டுபிடித்து போலீஸாரிடம் ஒப்படைத்தார். யாரோ ஒரு திருடன் அச்சிலையைத் திருடி, பின்னர் வந்துஎடுத்துக் கொள்ளலாம் என்பதற்காககுப்பைக் கூடையில் அவ்விதம் ஒளித்து வைத்திருக்கக் கூடும் என்று போலீஸார் கருதுகின்றனர்.

# இரகசியக் கார்

விளையாட்டு மோட்டார் கார் தயாரிப்பதில்இதுவரை 'போர்ஷி' முன்னணியில் இருந்து வந்தார். ஒவ்வொரு காரையும் தம் கைப்பட தயாரித்து வந்தார். ஆனால் இதற்கு தற்போது போட்டி மூளைத்துள்ளது. ஜெர்மனி 'ஓபல்' மோட்டார் கம்பெனியார் ரகசியமாகத் தயாரிக்கத் தொடங்கிய ஒரு 'ஸ்போர்ட்ஸ் கார்' பற்றிய விவரங்கள் தற்போது பகிரங்கமாகி விட்டன.

'மதமத'ப்பான மங்கையைப் போன்ற அமைப்பு; காணக் கவர்ச்சி, வேகமோ மணிக்கு 200 கிலோமீட்டர் கவர்ச்சியும் வேகமும் அதிகமிருந்தால் விலையும் அதிகமிருக்கும் என்பதில் சந்தேகமில்லை. ஏறத்தாழ 20,000 ரூபாய். அமெரிக்க போர்டு கம்பெனியார் தயாரிக்கும் 'முஸ்தாங்' காருக்கு கடும் போட்டியாக 'ஓபல்' கார் விளங்கும் எனக் கருதப்படுகிறது. 'ஓபல்' கார் இஞ்சின் 128 குதிரை சக்தியுள்ளது.

(யூ. பி. எஸ்.)

நாடகத்துறை

# அப்பாவின் ஆசை

### திருச்சி பாரதன் விளக்கம்

காரைக்குடி, டாக்டர். அழகப்ப செட்டியார் கல்வி அறநிலைய நிதிக்காக, டி. கே. எஸ். சகோதரர்களின் 'அப்பாவின் ஆசை' நாடகம். 12, 13-6-66 . தேதிகளில் திவான் பகதூர் முருகப்பா கலை அரங்கில் நடைபெற்றது.

12-ந்தேதி நாடகத்திற்கு அறநிலைய செயலர் திரு. சி. வி. சி. டி. வி. வெங்கடாசலம் செட்டியார் அவர்கள் தலைமை தாங்கினார்கள். அவர் பேசும்போது, நாடகத்தை தயாரித்த டி. கே. எஸ். சகோதரர்களையும், நாடகத்தின் கருத்தையும், ஆசிரியரையும், நடிகர்களையும் மிகவும் பாராட்டினார். நாடகத்தில் ஒரு இடம்தான் விறுவிறுப்புஇல்லாமல் இருந்தது. இடைவேளை விட்ட பத்து நிமிடந்தான் அது. மற்றபடி நாடகம் உணர்ச்சிகரமாக இருந்தது' என்று அவர் கூறினார்.

நாடக ஆசிரியர் திருச்சி பாரதன் பேசியதாவது :—

'நாடகம் அரங்கேறி, இன்றுடன் (12-6-66) ஓராண்டு முடிவடைகிறது. இந்த இடைக் காலத்தில்நாட்டின் பல நகரங்களில் நாடகம் நடைபெற்றுள்ளது. தமிழகத்தின் தலைநகரில் நாடகம் அரங்கேறிய போது நான் மேடையில் இருந்தேன்; பேசவில்லை. எனது சொந்த நகரம் திருச்சியில் நடைபெற்றபோது நான் மேடையில் இருந்தேன்; பேசவில்லை. கதை உருவான இடமான சேலத்திலும் மேடையில் இருந்தேன்; பேசவில்லை. ஓராண்டுகாலத்தில், இப்பொழுது தான் மேடையில் முதன் முதலாகப் பேசுகிறேன். இந்த ஊரில் அப்படிப் பேசுவதில் ஒரு பொருத்தம் உண்டு.

விவரம் தெரிந்த நாள் முதலாக குழந்தை இலக்கியத்துறையில் ஈடுபட்டுவருகிறேன். இந்தஇலக்கியப் பணியில்என்னைச் செம்மைப் படுத்தி உருவாக்கிய என் ஆசான் குழந்தைக் கவிஞர் திரு. அழ. வள்ளியப்பா அவர்கள் பிறந்து வளர்ந்த நாட்டில் பேசுவதை அவர்களுக்கு மானசீகமாக நன்றி செலுத்துவதைப் பெரும் பேறாகக் கருதுகிறேன்.

நான் சிறுவனாக இருந்த போது, திரைப்படக் கொட்டகைகளுக்குச் செல்வது உண்டு. அப்போது, ஒரு தாய் தன்மகளையும் கொட்டகை வாசலுக்கு அழைத்து வந்து, பிச்சை கேட்பாள். காலம் மாறியது. இப்பொழுது அந்தமகள் சிறுமியாக இருந்தவள் 'பெரிய பெண்' ஆகிவிட்டாள். அவள் தன்மகளை திரைப் படக் கொட்டகைக்கு அழைத்து வந்து பிச்சை கேட்டுக்கொண்டிருக்கிறாள். இப்படி, பிச்சை எடுப்படுத்தற்கு ஒருபரம்பரையே உருவாகி வருவதைக் கண்டு உள்ளம் மிகவும் வருந்தினேன். எனவே, பிச்சை எடுக்கக் கூடிய ஒரு சூழ்நிலை தன் குழந்தைக்கு ஏற்பட்டாலும், உழைத்துப் பிழைக்க வேண்டும் என்று உறுதி தளராமல் இருக்கும் படி மகனுக்கு உபதேசிக்கும் உத்தமத்தாயை உருவாக்க நினைத்தேன்; எனது கற்பனையில் ஜானகி தோன்றினாள்.

என்னுடைய நண்பர் ஒருவர், சமுதாயத்தில் நல்ல பெயர் எடுத்தவர். ஆனால் சமூக அமைப்பில், அவரும், அவருடைய மனைவி, குழந்தைகள் ஆகியோரும்பிரிந்து வாழ நேரிட்டது. பிள்ளைப் பாசத்தால் அவர் துடித்ததை நான் கண்டிருக்கிறேன். எனவே, நல்லவர்களால் பாராட்டப்பெற்ற அவருடைய உணர்ச்சியை ஒரு பொல்லாதவனுக்கு, சமுதாய துரோகிக்கு ஏற்றி வைத்தால் உருக்கமாக இருக்கும் என்று நினைத்தேன்; குப்புசாமி உருவானான். சிறுவன் குமார் எனது இலட்சியப் பாத்திரமாகத் தானாக அமைந்து கொண்டான்.

நான் சந்தித்த இருஉருவங்களுக்கு எதிர் மாறான குணங்களை வைத்தேன். நாடகத்தின் வெற்றிக்கு பாத்திரங்கள் 'உயிர்' பெற்றிருந்ததும்ஒருகாரணம்என்று கருதுகிறேன்.

இந்தியாவிலேயே முதல் குழந்தைகள் நாடகம் என்றும், தமிழ் நாட்டின் தொழில் முறையில் விரிவான அளவில் நடைபெற்ற முதல் குழந்தைகள் நாடகம் என்றும் 'அப்பாவின் ஆசை' பற்றி அறிஞர் பெருமக்களும் பத்திரிகைகளும் குறிப்பிட்டு வருவதை கண்டு வருகிறேன், தமிழ் இலக்கியத்தில் குழந்தைகள் நாடகம் பற்றி குறிப்பிடும்போது, 'அப்பாவின் ஆசை' நாடகத்திற்கும் ஓர் இடமுண்டு. அதன் மறைவில் எனது பெயரும் இடம் பெற்றிருக்கும் என்று உறுதியாக நம்புகிறேன்.

வாழ்க்கையில் பலருக்கு நன்றி கூறலாம். ஆனால்,சிலருக்கு மட்டும் நன்றி கூற முடியாது. பெற்று வளர்க்கும் தாய்க்கு நன்றி கூற முடியுமா? பேணி உருவாக்கும் தந்தைக்கு நன்றி சொல்ல முடியுமா? அதுபோல் என்னுடைய பெயருக்கு, தமிழ் இலக்கியத்தில் 'அமரத்துவம்' அளித்த மதிப்பிற்குரிய டி. கே. எஸ். சகோதரர்களுக்கும் என்னால் நன்றி கூற இயலவில்லை.'

இவ்வாறு திருச்சி பாரதன் பேசிய பிறகு, டி. கே. எஸ். நாடக சபா சார்பில் திரு. டி. கே. பகவதி அவர்கள் நன்றி கூறினார்.

## அதிசய தொலை நோக்கி

அண்மையில் சோவியத் எஞ்சினியரிங் கண்காட்சியில் ஒரு புதிய தொலை நோக்கியைவைத்திருந்தார்கள்.

இது உலகிலுள்ள மிகப் பெரிய தொலைநோக்கிகளில் ஒன்று. இதன் உயரம் 14.3 மீட்டர்; எடை 4 டன்! இதன் உதவியால் விண்வெளிக் கப்பல்களையும், பொருள்களையும் படமெடுக்கலாம்.

இதன் வழியாக ஒருவர் வானத்திலுள்ள 184 விண்மீன்களைக் காணலாம். இத்தொலை நோக்கியின் கண்ணாடி மிகமிக நுட்பமானது.

9300 கிலோ மீட்டர் தொலைவிலுள்ள விளாதிவாஸ்தாக்கில் ஒரு தீக்குச்சியைக் கொளுத்தினால், அதை மாஸ்கோவிலிருந்து மிகத் தெளிவாகக் காணலாம். (ஏ. பி. என்.)

## 2000 வயதான மரம்

லித்துவேனில் 2000 வயதான ஓக் மரம் இருக்கிறது. ஐரோப்பாவிலேயே மிகவயதான மரம் இது தான்!

இது சிலகாலம் நோய் வாய்ப்பட்டிருந்தது. ஆனால், இப்பொழுது அது குணமடைந்து விட்டது.

40அடி சுற்றளவுள்ள இம்மரம், இன்னும்நூற்றாண்டுக் காலம் வாழ்ந்திருக்கும் என்பது திண்ணம்.

**கரூர் டி. மு. கோ.**

O. P. 21/66

கரூர் கூத்தரசிக்காரத் தெரு, அலீமா என்ற பாப்பாள் 1. ஷேக் தாவூத் 2. நூர் முகம்மது 3. மைனர் முகம்மது அலி 4. மைனர் ஆசப் அலி 5.

4, 5 மைனர் மனுதாரர்களுக்கு 2வது மனுதாரர் கார்டியன்.

— மனுதாரர்கள்

முதல் மனுதாரிக்கு புருஷனும் மற்றவர்களுக்கு தகப்பனாருமான காலஞ்சென்ற காதர் முகையதீன் ராவுத்தருக்கு பாத்யப்பட்ட மனுவில் கண்ட துகைகளுக்கும் கடன்களுக்கும் வார்சு சர்டிபிகேட் கோரியிருப்பதில் ஷ மனுவில் 6-7-66ல் வாய்தா. ஆக்ஷேபணையை அன்று காலை 11மணிக்கு கோர்ட்டில் தெரிவிக்கலாம்.

K. முத்துராமலிங்கம்
2/7056/22 அட்வகேட்

# அறிவைத் தருவது ஆங்கிலந்தானா ?

— வா. கோ. பா.

மனிதனைச் சிந்திக்கும் பிராணியென்றும் கருத்துக்களைப் பரிமாறிக்கொள்ள அவன் உபயோகிக்கும் சாதனம் மொழி என்றும் இப்படி நாவினிக்கப் பேசுகிறவர்கள் ஒரு தனிமனிதனுடைய தகுதியைப்பற்றிக் கேட்கும்போது Is he educated? (அவன் கல்வி அறிவு பெற்றவனா?) என்பதை ஆங்கிலத்தைக் கொண்டே மதிப்பிடுகிறார்கள். இது நியாயமா?

சுமார் ஏழு லட்சம் கிராமங்களைக் கொண்ட நம் இந்திய மண்ணில் எண்ணும் எழுத்தும் கற்றிராத எத்தனையோ கோடி பேர் இருக்கிறார்கள். (புள்ளி விவர நிபுணரே! சீறாதீர்.) தாய்மொழியில் ஓரளவு தகுதி பெற்றவர்கள் அந்நிய மொழியைப் பயிலுவதும் புரிந்துகொள்வதும் எளிதே. ஆனால் தாய்மொழியில் தகுதிபெறா நிலையிலேயே அவர்களை அகில உலகப் பொதுமொழி என்று ஒரு புறம் ஆசையும்; ஆங்கிலம் இல்லையேல் வாழ்வில்லை என்று மற்றொரு புறம் பயமும் காட்டி அப்பாவிச் சிறுவர்களை ஆங்கிலத்தைக் கொண்டு அடிமுட்டாளாக்கி வருவது நம் கல்விப் பண்பாடாகிவிட்டது. தாய்மொழியில் எளிதாகப் புரிந்துகொள்ளக்கூடியவைகளை ஆங்கிலத்தைக் கொண்டு புரியாமற் செய்வதும் அந்த மொழிப்பயிற்சியில் பெரும் பொழுதைச் செலவிட்டும் பலன் காணாது பாலர்கள் திகைப்பதும் அனுபவ உண்மையாகிவிட்டது.

ஆங்கிலத்தின் சிறப்பையோ அது அகில உலகமெங்கும் பவனி வரப்பெற்றுள்ள வாய்ப்பையோ குறைத்து மதிப்பிடுவது என் நோக்கமல்ல. பொருள் உணர்ந்து பல துறைகளிலும் முன்னேறி விரைவில் ஒரு தொழிலில் அமர்ந்து வயிற்றுப்பாட்டிற்கு வகை செய்துகொள்ள வேண்டியவர்களை ஆங்கில மொழி ஒன்றைப் பயிலுவதிலேயே மழுங்க அடித்து அவர்களை உருப்போட்டு வாந்தியெடுக்கும் அவல நிலைக்குள்ளாக்கி எஸ். எஸ். எல். சி. போன்ற பொதுத் தேர்வுகளிலும் பப்ளிக் சர்வீஸ் கமிஷன் போன்ற தேர்வுகளிலும் திகைக்க வைப்பது நாட்டு மக்களுக்கு நாம் செய்கின்ற நல்ல பணிதானா?

ஒப்புக் கொண்ட மும்மொழித்திட்டத்தில் கூட முதல் மொழி தாய்மொழி.

இரண்டாம் மொழி இந்தி அல்லது ஏதாவது ஒரு இந்திய மொழி.

மூன்றாம் மொழிதான் ஆங்கிலம்.

ஆனால் அமலில் நடைபெறுவது என்ன? ஆங்கிலத்தை முதன் மொழியாக்கி அதை எவ்வளவு புரியாமல் அடிக்க முடியுமோ அவ்வளவும் செய்து அதில் அந்நிய நாட்டு உதவியுடன் நடந்த ஒலி விசித்திர விநோதங்களையும் புகுத்தி மூன்றாம் வகுப்பு முதல் பதினொன்றாம் வகுப்பு வரை மாணவ மணிகளை நாம் படுத்திவைக்கும் பாடு சொல்லத் தரமன்று. எஸ். எஸ். எல். சி. பொதுத் தேர்வில் எல்லாப்பகுதிகளிலும் நல்ல மதிப்பெண் பெற வேண்டிய மாணவ மணிகள் ஆங்கிலத்தையும் கணிதத்தையும் கட்டிக்கொண்டு அழுது அதிலும் நல்ல மதிப்பெண் பெறாமல் மற்றப் பகுதிகளிலும் ஞான சூன்யங்களாய்த் தோல்வியடைந்து முழக் கயிறுக்கும் மூட்டைப் பூச்சி மருந்துக்கும் பலியாகி வருவது உண்மை. 'என்ன செய்வது? திட்டம் வகுத்து விட்டோமே!' என்று சொல்லலாம். வகுத்த திட்டத்தில் விலகி நிற்க விரும்புகிறவர்களுக்கும் முன்னேற வாய்ப்பளிப்பது கண்ணியமாகும். காந்தியடிகளின் கருத்தையும் வினோபா அடிகளின் எடுத்துக் காட்டுக்களையும் ஏற்காமல் புறக்கணித்துவிட நாம் அவர்களைவிட தேசபக்தி உடையவர்கள் அல்ல. தாய்மொழி மூலமே மனித குலம் தன் அறிவைப் பெருக்கிக்கொள்ள இயலும். கல்வித்திட்டத்தில் தாய்மொழியே போதனா மொழியாக முதலிடம் பெற்றிருக்க வேண்டும், என்பதை ஒப்புக் கொண்டு ஆங்கிலத்தில் தகுதி குறைந்தவர்களை அறிவற்றவர்களாக ஒதுக்குவது எங்ஙனம் பொருந்தும்?

இந்த நாட்டில் ஜனத்தொகைப் பெருக்கத்தைக் குறைப்பதற்காக எடுத்துக் கொண்ட முயற்சி அளவு கூட உண்மையான கல்வி—வயிற்றுப்பாட்டுக்கு வகை செய்யும் கல்வி—எங்கும் பரவ வகை செய்யப்படவில்லை.

என் வீட்டில் மின்விளக்கு அணைந்துவிட்டது. எனக்கு மின்சாரத்தின் தத்துவம் தெரியும். முதன் முதலாக மின்சாரம் உற்பத்தியாக எங்கே எப்படி முயற்சி எடுக்கப்பட்டது என்ற கதையெல்லாம் தெரியும். ஆனால் அவசியம் தெரிந்திருக்க வேண்டிய ஸ்விட்சில் ஏற்படும் சிறு கோளாறைச் சரி செய்யும் தகுதி எனக்கு இல்லை. எள்ளளவும் கல்வித் தகுதி இல்லாத—ஏழாம் வகுப்பைக்கூட எட்டிப் பாராத—ஒரு பாமரத் தொழிலாளி ஸ்விட்சை சரி செய்து மின்னொளி பாய்ச்சிவிட்டுச் சென்றுவிட்டான். அவனை நான் அழைத்துக் கேட்டேன், 'எவ்வளவு தூரம் படித்தாய்?' என்று. தான் யாரிடமோ ஐந்தாறு வருடம் ஊழியனாகத் தொண்டு புரிந்த கதையைத்தான் அவன் சொன்னான்.

அதிர்ஷ்டவசமாக நம் குழந்தைகள் உயர்நிலைப் பள்ளி கட்டத்தில் மின் பொறி இயக்கங்களைத் தெரிந்துகொள்ள வாய்ப்பிருக்கிறது. எல்லாப் பள்ளிகளிலும் சோதனைச்சாலை அமையாவிட்டாலும் ஓரளவு உணர்த்த வழி வகை இருக்கிறது. இதுபோன்ற பொருளறிவுக்கு ஆங்கிலம் மட்டுமே வகை செய்யுமா? தாய்மொழி செய்யாதா? கண் பார்த்ததைக் கை செய்யும் என்று நேரிடையான அனுபவ மூலமே எத்தனையோ விஷயங்களில் அறிவுபெறும் வாய்ப்பிருக்கும்போது வாக்கிய அமைப்பிலோ சொல்லுவதை எழுதும் பாணியிலோ நம் தாய்மொழியை ஒரு சிறிதும் அனுசரிக்க இயலாத ஆங்கிலத்திலேயே நம் பச்சிளங் குழந்தைகளின் ஆர்வம், உழைப்பு, முனைப்பு யாவற்றையும் மழுங்க அடித்து பொதுத் தேர்வுகளில் அவர்களை முட்டாள்களாகவும் ஆக்குவதுதான் நம் கல்வியின் இலட்சியம் என்றால் இன்று நாம் பெற்று வரும் அனுபவங்களைப்பற்றி வேறு எதுவும் நான் கூற விரும்பவில்லை.

ஆங்கிலம்போலவே நமக்கு அதிகம் பழக்கப்படாத மொழிகள் எத்தனையோ? அவைகளில் அவரவர் விரும்பி ஏற்பதை அவைகளின் தகுதியைப் பற்றி ஆராயாமல்—கற்பதில் உள்ள வசதி, கற்றபின் பெறும் பயன் இவைகளை மட்டும் கருத்தில்கொண்டு கற்பிக்க முன்வந்தால் உண்மையிலேயே தாய்மொழிக்கு அடுத்த இரண்டாம் மொழியும் அவரவர் விரும்பி வரவேற்கும் இஷ்ட பாடமாகவே அமையும்.

இந்த வகையில் இந்தி மொழிப் பயிற்சி எளிதா இல்லையா என்பதை உயர்நிலைப்பள்ளி கட்டத்தில் மூன்றே ஆண்டுகள் மட்டும் வாரத்தில் மூன்றே பொழுது மட்டும் கற்க வாய்ப்புள்ள மாணவர்களே கூறட்டும்!

———

# இலக்கியப் படைப்பு எதற்கு ?

— யயாதி

சொந்த வீட்டில் இடம் பெறமுடியாத நான்கு அப்பாவிக் கலைஞர்கள் கல்யாணமாகியும் பிரம்மச்சாரியாக விளங்கும் ஒரு மாஜி எழுத்தாளர் வீட்டில் அவ்வப்போது கூடி இலக்கிய சர்ச்சை எனும் பெயரால் அவரவர் இடம்பெற முடியாத பத்திரிகைகளின் தரத்தைப்பற்றி முடிந்த வரையில் காரசாரமாக விவாதம் செய்வார்கள்.

'இந்தப் பயங்களே இப்படித்தான். நேரிலே போய்ப் பாக்கற நபர்களைத் தவிர வேறு யாருடைய எழுத்தையும் தொட்டுக் கூட பார்க்கமாட்டாங்க.'

'ஆ, அப்படி ஒண்ணும் சொல்லமுடியாது. ஆயிரக்கணக்கானபேர்கள் எழுதறாங்க. இருக்கிற பத்திரிகை ஐந்தோ ஆறோ; எண்ணிப் போட்றது ஏழு அல்லது எட்டு கதை கட்டுரை. நடுநடுவே ஊசிப்போன குழம்பைக் கொதிக்க வச்சுப் பழைய சோற்றுக்கு உபயோக்கிறாற்போல 'ஆதாரம்', 'தகவல்', 'உதவியவர்', 'தழுவியவர்', 'மொழிபெயர்ப்பு', 'தமிழில்', இப்படியெல்லாம் தலைப்பிட்டு, தையற்கடைக்காரனின் குப்பையில் விழும் கட்பீஸ்களைப்போல, பிச்சைக்காரன் வாந்தியெடுத்த கண்றாவியைப் போல, சுயமாகச்சிந்தித்துச் சொந்தமாக எழுதுகிற நல்ல கலைஞர்களுக்கு ஆதரவு தராமல் லண்டனில் இருந்து லப்பைப்குடிக்காடு வரை எங்கெங்கோ எந்தெந்த மொழியிலோ எந்த ஜன்மத்திலோ வெளியான குறிப்புகளின் துண்டு துணுக்குகளை இன்றைய பத்திரிகைகள் இலக்கிய சேவையாகப் படைத்து வருகின்றன.

பாவம், எழுபது எண்பது, நூறு இருநூறு என்று பரிசு பெற்று, புதிய இலக்கியம் படைக்கவேண்டிய நல்ல எழுத்தாளர்கள் தபால் தலைக்கும் எழுதும் தாள்களுக்கும் குடிக்கும் காபிக்கும் வகை செய்யட்டுமே என்று பெரிய பத்திரிகைகளுக்குக் கத்தை கத்தையாக வாரந்தோறும் தவறாமல் பிரசுரம் ஆனாலும் ஆகாவிட்டாலும் ஆதாரம் தகவல்களை வாரி வழங்கிக் கொண்டிருக்கிறார்கள். நீண்ட கட்டுரைகளையும் கதைகளையுமே திருப்பி அனுப்பப்போதிய நிதிவசதி படைத்திராத அப்பாவிப் பத்திரிகைகள் இந்தக் 'கட்பீசு'களைப் பொறுமையோடு பார்த்துத் தேர்ந்தெடுத்துப் பிரசுரிக்கமுடியாதவற்றைத் திருப்பி அனுப்புவது சாத்தியமா? எனவே எழுத்தாள அன்பர்களாகிய நாம் இன்று முதல் ஒரு புதிய முடிவுக்கு வருவோம். ஏதாவது ஒரு பத்திரிகை தன் எழுத்தை வெளியிட்டாலன்றி மீண்டும் அந்தப் பத்திரிகைக்கு எழுதுவதில்லை என்று ஒரு புது விதி செய்வோம்.'

இந்த முடிவை ஏகமனதாக எல்லோரும் ஏற்றுக் கொண்டார்கள். இந்த முடிவு அமலுக்கு வந்தால் தபால் தலை விற்பனை திடீரென்று சரிந்துவிடுமே என்று நால்வருள் ஒருவரான தர்மகர்த்தா எழுத்தாளர் ஸ்டாம்பு விற்கும் தபால் ஆபீசுக்குப் புறப்பட்டுச் சென்றார்.

இனி எழுதுபவைகளை எந்தக் காரணத்தைக் கொண்டும் இங்கேகொண்டு வரக்கூடாது என்ற முடிவுடன் கோடை விடுமுறை எழுத்தாளர் தன் காலேஜுக்கு அருகிலுள்ள தபால் ஆபீசை நோக்கி நடந்தார்.

பிறரை எழுத ஊக்குவித்துத் தாம் அதிகம் எழுத விரும்பாத கவிஞர் அன்றுடம் ஊர்சுற்றி வரவேண்டிய நண்பர்களை நாடி வெளியே சென்றார்.

எல்லோருக்கும் இந்த யோசனையை வழங்கிய மாஜி எழுத்தாளர் மொத்தமாக தபால் தலைகளை வேறு எங்கிருந்தோ தருவித்து வைத்துக்கொண்டு நண்பர்கள் கண்ணில் படாமல் தினந்தோறும் தவறாமல் 'ஆதாரம் தகவல்'களை ஆர். எம். எஸ்ஸிலேயே 'போஸ்ட்' செய்துவருகிறார்.

# குழந்தை மேதைகள்

'விஞ்ஞானமும் வாழ்வும்' என்ற சோவியத்பத்திரிகை, உலகப்புகழ்பெற்ற குழந்தை மேதைகளைப் பற்றி எழுதியிருக்கிறது.

200 ஆண்டுகளுக்குமுன், ஜெர்மனியில் இருந்த ஹென்றிச் ஹீன்கென் என்ற மூன்று வயதுக் குழந்தை, தேவதைக் கதைகளைப் படிப்பதிலும், கணக்கிலும் மேதையாகத் திகழ்ந்ததாம். வெகு விரைவில் அக்குழந்தை பிரெஞ்சு மொழியிலும், பூகோளத்திலும் தேர்ச்சி பெற்றதாம்; ஆயிரம்லத்தீன் பழமொழிகளைக் கடகடவென்று ஒப்புவிக்குமாம்.

மேதைகளில் 30 சதவிகிதத்தினர் 11 வயதிற்குள்ளேயே தமது மேதாவிலாசத்தைக் காட்டி விடுகின்றனர்.

பாஸ்கல் என்ற மேதை தமது 15வயதில் விஞ்ஞான நூல் எழுதினார்; அதில் 150 புதிய உருக்கணக்குகளை நிரூபித்தார்.

சைபர்னடிக்ஸின் தந்தையான வீனர்; 5வயதில் விஞ்ஞானத்தில் மிகப் பெரும் ஆர்வம் காட்டினார். அவருக்கு ஒன்பது வயதிருக்கும் போது, அவருடன் படித்தவர்களுக்கு வயது பதினெட்டு! அவர் பதினான்காம் வயதில் விஞ்ஞானப் பட்டம் பெற்றார்!

இதற்கு நேர்மாறானவர்களும் உண்டு. மொஸார்ட், கதே, பைரன், டார்வின், ஸ்காட் ஆகியோர் பள்ளிக்கூடத்தில் மக்குகளாகக் கருதப்பட்டனர். ஆனால், கலை இலக்கிய கர்த்தாக்கள் என்ற முறையில், அவர்கள் இளமையிலேயே வெற்றி பெற்றனர்.

மொஸார்ட், ஏழு வயதிலேயே நான்கு அற்புத இசைப் பாடல்கள் எழுதினார்.

கதே, ஒன்பது வயதிலேயே ஜெர்மன், கிரேக்க லத்தீன் மொழிகளில் கவிதைகள் இயற்றினார்!

(ஏ. பி. எஸ்.)

[[illegible]-ம் பக்கத் தொடர்ச்சி]

படுத்தப் படவில்லை. அதனுட்புறத்தில் வட்டப்பகுதி தொடங்கும் இடம்வரையில் ஏறலாம். அங்கே 'பால்கனி' போன்று சுற்றிவர தாழ்வாரமுள்ளது. அங்கிருந்து மெதுவாக கைதட்டினுலோ அன்றி குரலெழுப்பினுலோ தெளிவாக ஏழெட்டு முறை எதிரொலிக்கின்றது.

### வாதாபி

பாதாமி என்னும் புகைவண்டி நிலையத்தில் இறங்க வேண்டும். இவ்வூரில் சில குகைக் கோயில்களுள்ளன. இங்குள்ள சிறப்பு என்னவென்ருல், மற்றைய குகைகளைப் போலன்றித் தலைக்குமேல் கூரையிலும் அழகிய சிற்பங்கள் செதுக்கப்பட்டுள்ளன. அதைச் சார்ந்து மலைமீது கோட்டையுடிம், அங்கே பீரங்கியும் உள்ளன. காஞ்சிபுரம் வந்து மகேந்திர பல்லவனை தோற்கடித்த இரண்டாம்புலிகேசி ஆண்ட இடமிதுவே, மகேந்திரனின் மகன் நரசிம்ம வர்மன், வாதாபி வந்து, தந்தையைத் தோல்வி கண்டவனை வென்று வாகை சூடினுன். அதற்கான கல்வெட்டு ஒன்று குகையின் எதிரிலுள்ள குளத்தின் மறுகரையிலுள்ளது. இத்தகைய வெற்றி கொண்டதால் நரசிம்மனுக்கு மாமல்லன், வாதாபிகொண்டான் என்ற சிறப்புப்பெயர்களும் உண்டு. இவ்வூரின்தெருக்களில் தான் சிவகாமி சாட்டையடிபட்டு நாட்டியம் ஆடியதாகக் கல்கியின் 'சிவகாமியின் சபதம்' புதினம் விளம்புகிறது, மிக வரண்ட இந்நகரில் காய்கறிகளும் கிடைத்தலரிது. கன்னட மொழி பேசும் மக்களே மிகுதி. இருண்ட மொட்டை மாடிகளும் அதிகம்.

இவ்வூர் தபாலாபீசில் தொலைபேசி பேசுவோருக்கான பெஞ்சொன்றில் அமர்ந்து கடிதம் எழுதிக் கொண்டிருந்தோம். அவ்வழியே வந்த நண்பர்களை சத்தம் போட்டு அழைத்தோம், தபாலாபீஸில் வேலை செய்பவர் வந்து சத்தம் வேண்டாம்; எழுந்து செல்லுங்கள்; என்ருர். கத்தவில்லை என்ற பிறதும் மீண்டும் மீண்டும் போய் விடச் சொல்லவே சினத்துடன் 'நீர் மனிதரா? கடிதம் எழுதித்தான் போவோம் என்ருேம். இரண்டாவது அவன் வாய்திறக்கவில்லை. வாதாபி கொண்டானுக்கு கிடைத்த வெற்றிபெற்றதாக மகிழ்ந்து சென்ருேம். மிக வரண்ட அப்பகுதி உணவு விடுதிகளில் கைநீரும் வைப்பதில்லை. இப்படிப்பட்ட இடத்தை நாடி அரசர் எதைக் கண்டு படையெடுத்தனரோ என உள்ளத்தில் வியந்தோம்.

### விசயநகரச் சிதைவுகள்

பதினைன்காம் நூற்ருண்டின் இடையில், வடக்கே பரவிய முஸ்லிம் ஆதிக்கத்தைத் தெற்கில் பரவாமல் தடுக்கத் துங்கபத்திரை ஆற்றங்கரையில் ஹரிஹரர், புக்கர் என்னும் சகோதரர் அமைத்த நகரமே விசயநகரம். இதுவே பேரரசாகப் பரவியது.கிருஷ்ண தேவராயர் என்பவரிங்கே பேரரசர். நகைச்சுவைக் கதைகள் கூறிய தெனுலிராமனும் இவரது அரசவையில் விளங்கியவனே; இந்நகரச் சிதைவுகள் பல சதுரமைல்களுக்குப் பரவியுள்ளன. பலகோயில்களுள்ளன. கோட்டைச் சுவர்கள் பலமைல் நீளத்துக்குச் சிதைந்து வீழ்ந்துள்ளன. ஆறுவளைந்து நெளிந்து ஓடி அமைதியான வளைகுடாக்களை ஏற்படுத்தியுள்ளது.

கிருஷ்ண தேவராயர் தம் பிறந்த நாளைக் கொண்டாட ஒரு தராசில் அமர்ந்து, தன் எடைக்கு எடை தங்கம் கொடுத்து வழங்கியதாகக் கூறப்படும் தராசு இருந்த ஒரு நிலுவையுள்ளது. இரு பெரிய கம்பங்கள் நிற்க, இரண்டையும் மேலே ஒரு பாறை உத்தரம் இணைப்பது இந்நிலுவை அதனருகிலுள்ள கோவிலிலே அழகும் சிறப்பும் மிக்கது. அக்கோயிலில் கல்லால் செய்த தேர் ஒன்று உண்டு.ஒரே தூணில் ஏழு சிறுதூண்கள் ஏழிசையும் தருமாறு செதுக்கப் பட்டுள்ளன.

விசிய நகரச் சிதைவுகளை ஹம்பிச் சிதைவுகள்என்றும் கூறுவர். இவற்றைக் காண ஆந்திராவிலுள்ள ஹாஸ்பேட் இருப்புப்பாதை நிலையத்தில் இறங்கவேண்டும். இந்நகரில் துங்கபத்திரையாற்றின் குறுக்கில் பெரிய அணையும் ஒன்றுண்டு. இத்தகைய வாழ்வளிக்கும் திட்டம் கொண்ட அணைகளையும் தொழிற்சாலைகளையுமே நேரு, 'சுதந்திரத்தின் கோவில்கள்' எனப் பாராட்டினுர். இத்தகைய சிறப்புடைய இடங்கள் இந்தியாவில் ஏராளமாயுள்ளன.

(முற்றும்)

## மயக்கும் வித்தை ஒரு பழங்காலக் கலை!

'ஹிப்னுஸிஸ்' எனப்படும் மயக்கும் வித்தை, மிகப் பழைமையானது என்று சோவியத் ஆராய்ச்சியாளர்கள் கூறுகிருர்கள்.

ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் சீனுவிலிருந்த புத்த சாமியார்கள், மயங்கிக்கிடக்கும் தமதுசீடர்களின் காதில் மந்திரங்களை முணுமுணுத்தனர். பலங்கால இந்தியப் பக்கிரிகளும், தமது சீடர்களுக்கு இவ்வித்தையைக் கற்றுத் தந்தனர்.

எதியோப்பியாவில் மந்திரவாதத்தில் மயங்கும் சிறுவர்கள், துப்பறிவோராகப் பழக்கப் பட்டனர். இது பண்டைக்கால வழக்கம். அவர்கள் மயங்கிய நிலையில் ஒரு குற்றவாளியைப் பற்றிய அங்க அடையாளங்களை மிகத் தெளிவாகவும், வேகமாகவும் கூறினர்!

(ஏ. பி. என்.)

இலக்கியக் கட்டுரை :

# தமயந்தி கண்ட தாமரை

— வைரி. தரளம்

'வாழ்க்கையின் படப்பிடிப்புதான் இலக்கியம்' என்பர். ஆனால், படம் எடுக்க எவ்வளவு பாடு. அதற்கு எவ்வளவு பொருள் செலவு என்பதை படம் எடுப்பவரையும், அதற்கு பொருள்செலவழித்தோரையும் கேட்டால், எளிதில் விளக்குவர். எந்த ஒரு செயலையும் சொல்வது எளிது. ஆனால் அரியவாம் சொல்லியவண்ணம் செயல் என்பது வள்ளுவருடைய கருத்து. இது போன்றது தான் இலக்கியத்தில் நுழைகின்ற முயற்சியும். இலக்கியத்தில் நுழைந்து அனுபவித்து வெளியிடுகின்ற நயமும் கருத்தும் இருக்கிறதே, அது ஒரு அரும் பெரும் முயற்சியாகும். பெரும்பாலும் இலக்கியம் இன்பத்தில் முகிழ்க்கிறது என்பது பலருடைய கருத்து. துன்பமும் இன்பத்தை அடிப்படையாகத் தொடர்வது என்பதும் சிலருடைய கருத்தாகிறது. எது எப்படியாயினும் இன்பத்தையோ, துன்பத்தையோ அனுபவிக்கின்ற உணர்ச்சி இருக்கிறதே, அது அனுபவிப்போரை பண்படுத்தும் ஒரு சிறந்த 'உணர்ச்சி' எனலாம்.

எழுகின்ற உணர்ச்சியை ஒலியாகவோ, எழுத்தாகவோ அல்லது ஓவியமாகவோ வரைந்து விடுவர், 'கலை உள்ளம்' படைத்தவர்கள். அப்படி, உணர்ச்சியை ஒழுங்குபடுத்தி வைக்காவிட்டால், தொல்காப்பியத்தையும், தொண்டர் புராணத்தையும் காணமுடியுமா; இல்லை, பட்டினப் பாலையையும், பாண்டியன் பரிசையும் காணமுடியுமா; பாலைக்கலியையும் பரிபாடலையும் பார்க்க முடியுமா, 'தேனெனச் சுரக்கும், இத்தகைய இன்பச்சுரங்கத்தில் மூழ்கி, அழகொளிரும் இலக்கிய மாளிகையைக் கட்டுகின்றனர். அந்த 'மாளிகை' வெண்ணிலாவாலும், வேங்கையின் மைந்தனாலும் காக்கப்பட்டு வளர்க்கப்பட்டு வளருகின்றன. இந்த நல்ல நேரத்தில், அந்த சுரங்கத்தில் கிடக்கின்ற, ஒரு நல்ல காவியம், அந்தக் காவியம் பாடிய புலவன், நமது, வள்ளுவன் சொன்ன தோன்றிற் புகழை ஏந்திக் கொண்டவன்.

காவிய உலகுக்கு புதுவழி காட்டிய புலவன் கீற்றையும் ஓலையையும் கொண்டு வேய்ந்த வீட்டை, கற்பசையாலும் கண்ணாடியாலும் வேயலாம் என்று காட்டுகிறார்களே, அதுபோல், அகற்பாவாலும், சந்தப் பாவாலும் கட்டிய மாளிகையை, 'வெண்பா'வாலும் கட்டமுடியும் என்று காட்டியவன். காலத்தாற் சென்ற, அந்த கோலப்புலவன் கொடுத்த ஒரே காவியம் இருக்கிறதே, அப்பப்பா! சொல்லமுடியுமா! அதன் அழகை சொல்லின் வளத்தை செந்தமிழ்த் திறத்தை 'தேன், தேன் என்கிறார்களே' அந்த தேனில்லவா மாளிகையைக்கட்டியிருக்கிறான். அதனால் தான் அதை, 'தேன் மாளிகை' என்று எண்ணத் தூண்டுகிறது.

'பூவினுக் கருங்கலம் பொங்கு தாமரை' என்று பழஞ்செய்யுளொன்று பகரும். அந்த வகையில் தாமரை தலைமையிடமும், தனிச்சிறப்பும் பெறுகிறது. பண்புகருதி தாமரையை பகராதார் யாருமிலை. 'வண்டு தமிழ் பாட்டிசைக் 'கும் தாமரையே!' என்று கம்பன் சொன்னான். சீதையை அறிந்து செல்ல வந்த அனுமான் சீதையைப் பார்க்கும் போது, 'சித்திரத் தாமரையைக்' காட்டினான், புகழேந்தியோ, தமயந்தி அடையப்போகும் உள்ளத் தாமரையைக் காட்டுகிறான்.

அன்னம் நளனிடம் சென்று, அவனது அழகையும் சிறப்பையும் அறிந்து வந்து கூறுகிறது. சுயம்வர மண்டபம். இது ஒரு தேர்தல் முறை. இதற்கு முற்காலத்தில் சிறப்பிடம் உண்டு. பல நாட்டு மன்னர்களும், மதிப்பிற்குரியவர்களும் அங்கு வீற்றிருப்பார்கள். மங்கை தனக்குப் பிடித்த மணாளனை மாலையிட்டால், அவளை அவன் உரிமையாக்கிக் கொள்வான்.

இப்படி ஒரு முறை தமயந்திக்கும் ஏற்பாடு செய்யப்பட்டது. அவள் சுயம்வர மண்டபத்தை அடைந்தாள். இது தான் செய்தி. பொன்னின் மடப்பாவை போய்ப்புகுந்தாள். போய்ப் புகுந்த இடம் எப்படி இருக்கிறது? தாமரை பூத்த மண்டபம். அந்த மண்டபத்திலே, மன்னர்கள் விழித்த கண் இமையாது பார்த்துக் கொண்டு இருக்கின்றனர். ஏன் இப்படி, பார்த்துக் கொண்டு இருக்கிறார்கள் என்றால், அவளது அழகை காணவேண்டும். ஒவ்வொருவரும் தனக்கே மாலை சூட்ட வேண்டும் என்று எண்ணுவதால்.

சுயம்வர மண்டபத்தை அடைந்தாள். என்ன செய்தாள்? இங்கே தான் புலவனின் உவமையை எழிலுறக் காண்கிறோம். செந்தாமரை பூத்த பொய்கை! அதிலே, வெண்மையான அன்னம் போய், தஞ்சமடைவது போல, தமயந்தி சுயம்வர மண்டபத்தை அடைந்தாள். மன்னர் விழிகளெல்லாம் எப்படி இருக்கிறதாம்? தாமரை பூத்தாற் போல்.

அச்சம், நாணம், மடம் பயிர்ப்பு என்ற அணிகலன்களில் ஒன்றான மடத்தை பெற்றுள்ளாள் என்பதைக் குறிக்க, 'மடப்பாவை, என்று குறித்துள்ளமை மாண்புடையதாக உள்ளது. 'பொய்கை வாய் போவதே போன்று' என்று காட்டியுள்ளது தமயந்தியின் நடையழகைக் காட்டுவதாக உள்ளது. 'செங்கமலம்' என்பது தமயந்தி கண்ட தன்மைக்குச் சிறப்பாகிறது. நளகாவியம் என்றகருப்புக்கட்டியை உடைத்து உடைத்து உண்பாருக்கு, 'ஊறும்' சுவை விளங்கும். அப்படி உடைக்கும் போது கிடைப்பதை மற்றவர்களுக்கும் கொடுப்பது மாண்பாகிறது. அப்படிப்பட்ட தேம்பாவான, வெண்பாவைக் காணுங்கள்.

*மன்னர் விழித்தாமரை*
*பூத்த மண்டபத்தே*
*பொன்னின் மடப்பாவை*
*போய்ப்புக்காள்-மின்னிறு*
*செய்தாள் வெள்ளைச் [த்துச்*
*சிறையன்னம்செங்கமலப்*
*பொய்கை வாய்ப்*
*போவதே போன்று!*

## சந்திரனின் தரை

இம்மாத முதல்வாரத்தில் சந்திரனில்போய் இறங்கிய 'சர்வேயர்' என்ற யு. எஸ். விண்வெளிகூடு சந்திரனின் தரைப்பரப்பைப்பற்றி 10,338 புகைப்படங்களை டெலிவிஷன்மூலம் பூமிக்கு அனுப்பியிருக்கிறது. இந்த புகைப்படங்களை ஆராய்ந்த யு. எஸ். விஞ்ஞானிகள் சந்திரனின் பரப்பில் புழுதிப் படலம் மண்டியிருக்கவில்லை, கற்களும் குழிகளும் நிறைந்த கெட்டியான தரைதான் இருக்கிறதென்று வியாழன் இரவில் அறிவித்தனர்.

'சந்திரனின் பரப்பில் மனிதர்கள் சாதாரணமாக நடக்கமுடியும் தக்கவடிவத்தில் அமைக்கப்பட்ட விண்வெளிக் கப்பல்கள் சந்திரனின் பரப்பில் ஆபத்தின்றி இறங்கமுடியும்.' என்ற 'சர்வேயர்' ஏவுதிட்டத் தலைவர் டாக்டர் ஜம்பி கூறினார்.

Regd No. M. 3398 Phone No: 2848 Shivaji Tamil Weekly 19—6—1966



# இணைந்து இருபத்தைந்து ஆண்டுகள்



மூன்று நிறுவனங்கள் ஒன்றாய் இணைந்து இன்றோடு இருபத்தைந்து ஆண்டுகளாகின்றன. திருச்சி-ஸ்ரீரங்கம் மின்சார நிறுவனம் (1924), கிழக்குத் தஞ்சை நிறுவனம் (1935), கிழக்கு இராமநாதபுரம் நிறுவனம் (1937), இவை மூன்றும் 1940-ல் ஒன்றாக இணைந்து உருப்பெற்றதே சவுத் மெட்ராஸ் எலெக்ட்ரிக் சப்ளை கார்ப்பரேஷன் லிமிடெட்-இன்று அதன் வெள்ளிவிழா!

## காந்தி தந்த காந்தி




மின் வழங்கும் துறையில் முன்னோடிகளான திருச்சி-ஸ்ரீரங்கம் நிறுவனத்தார் 1930 முதலே மிகத் தொலைவிலுள்ள பட்டி தொட்டிகளுக்கும் மின்சாரம் வழங்கினர். 1927 செப்டம்பர் 27-ல் காந்தியடிகள் நாள் முழுவதும் மின் வழங்கும் பணியைத் தொடங்கி வைத்தார். புகழ் பெற்ற டாக்டர் ராஜன் மருத்துவச் சாலையின் எக்ஸ்ரே பகுதிக்கு அன்றே மின்வசதி அளிக்கப்பெற்றது.

தன்னலத்தைக் காட்டிலும் பொதுநலமே கருத்தாகக் கொண்ட காரணத்தினால், இன்று எங்கள் பணி எல்லாக் கிராமங்களுக்கும் பயன்படுகிறது. இன்று ஏறத்தாழ ஆயிரம் ஊர்களில் மின்வளம் கொழிக்கிறது.

## வழி வகுத்த வித்தகர்



மின்சாரம் ஒரு புதுமையாகவும், வியப்பாகவும் இருந்த காலத்தில் இந்தத் துறையில் ஒரு ஊக்கமும் முயற்சியும் மேற்கொண்டு சாதித்த மேதை அமரர் வி. சேஷசாயி அவர்களுக்கு எமது அஞ்சலி உரியதாகும்.

எங்கள் வாடிக்கையாளர்கள், உடன் உழைக்கும் ஊழியர்கள், "தேசீய மயம்" பற்றிய பல அறிவிப்புகளின் இடையிலும் தளராது ஆதரித்து வரும் பங்குதாரர்களுக்கும் எங்கள் நன்றிப் பெருக்கு உரியதாகும்.

புகழாளர்களான சர். டி. தேசிகாச்சாரி, இராவ் சாகிப் கே. இ. சிதம்பர அய்யர், திவான்பகதூர் எஸ். இராகவ அய்யங்கார், திரு. எஸ். வைத்தியநாத அய்யர் ஆகியோருக்குப் பிறகு இப்பொழுது முத்தமிழ்க் காவலர் திரு. கி. ஆ. பெ. விசுவநாதம் அவர்கள் இன்று எங்கள் இயக்குநர் குழுத்தலைவராக விளங்குகிறார்.

*வெள்ளி விழா—ஜூன் 20—ஜூன் 22, 1966*

*தமிழ்நாடு கவர்னர் திரு. பி. சந்திரா ரெட்டி அவர்கள் தொடங்கிவைக்கிறார்.*

**சவுத் மெட்ராஸ் எலெக்டிரிக் சப்ளை கார்ப்பரேஷன் லிமிடெட்,**

பவர் ஹவுஸ், தென்னூர், திருச்சிராப்பள்ளி.

Criterion-SME-907

Edited and Published by its owner Sri. Triloka Sitaram & Printed by him at his Shivaji News Printers, 2-A, Fort Station Road, Tiruchy-2.
Annual Subscription Including 4 special numbers Rs. 10.